5th September 1960]

கடிதங்கள் எழுதப்பட்டிருக்கின்றன, பதில் வராத கடிதங்கள் எவை என்பதை அச்சிட்டு இந்த மன்றத்தில் வழங்கினார்களே ? கனம் அமைச்சர் அவர்கள் அதைப் படித்தார்களா ? இல்லையென்றால் அதைப் படித்துப்பார்த்து தகுந்த நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி அச்சிட்டுக் கொடுத்ததை நான் பார்க்கவில்லை. ஆதலால் மற்ற கேள்விகள் எழவில்லை.

*Lignite at Wallajah taluk*

*427 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு ஜில்லா, வாலாஜா தாலூகாவில் கண்டெடுக்கப்பட்ட நிலக்கரி மேற்படி ஜில்லா கலெக்டர் அவர்களால் சர்க்காரின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டுள்ளதா ?

(ஆ) பரிசீலனை செய்யப்பட்டதா ?

(இ) அதன் விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) The information is being collected and will be placed in the library of the House.

*Common tool room shops*

*428 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் கிராமப் பொது வசதிப் பட்டறைகள் ஏற்படுத்துவது பற்றி அரசாங்கத்தால் பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறதா ?

(ஆ) அப்படியாயின் இத்திட்டம் எப்போதிருந்து அமுலுக்கு கொண்டு வரப்படும் ?

(இ) எந்தெந்த இடங்களிலே இப்பட்டறைகள் ஏற்படுத்தப்படும். ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) It is proposed to establish two Service-*cum*-Common Facility Workshops during 1960–61, one at Kurumbapatti in the Nilakottai Block, Madurai district and the other at Bhavani in the Bhavani Block, Coimbatore district.

SRI P. G. MANICKAM : தேசிய விஸ்தரிப்புத் திட்டப் பகுதிகளில் இவ்வாறு பொதுப் பட்டறைகள் ஏற்படுத்தப்படுமா ? கூடுமானவரையிலும் ஒவ்வொரு திட்டப் பகுதியிலும் ஒரு பொதுப் பட்டறையை ஏற்படுத்துவதற்கு சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இம்மாதிரி அதிகமாக தொழில் பட்டறைகள் பல இடங்களில் ஏற்படுத்துவதாக உத்தேசம்.